*Co-operative Spinning Mill*

* 227 *Q.*—VIDWAN T. MUTHUKANNAPPAN : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether there is any proposal to open co-operative Spinning Mill at Kancheepuram; and

(*b*) if so, the stage at which the matter now stands?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Yes, Sir.

(*b*) The grant of licence from the Government of India is awaited.

SRI S. K. SAMBANDHAN : *மற்ற ஜில்லாக்களிலும் ஏதாகிலும் இந்த கூட்டுறவு நெசவாலைகள் ஏற்படுத்துவதற்கு அரசாங்கத் திடம் இப்போது திட்டம் இருக்கிறதா என்பதை அமைச்சர் அவர்கள் சொல்வார்களா ?*

THE HON. SRI R. VENKATARAMAN : *சமீபத்தில் ஒரு கூட்டுறவு மில் கொடுக்கப்பட்டது. இதற்கு முன்பு 3 கூட்டுறவு மில்கள் நடந்துகொண்டு இருக்கின்றன. இரண்டு கட்டப்பட்டு வருகின்றன. மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மேற்கொண்டு இன்னும் மூன்று இடங்களில் கூட்டுறவு மில்கள் கொடுக்கவேண்டு மென்று கேட்டிருக்கிறோம்.*

SRI S. K. SAMBANDHAN : *அந்த மூன்று இடங்கள் எவை யென்பதை அமைச்சர் அவர்கள் சொல்வார்களா ?*

THE HON. SRI R. VENKATARAMAN : *அதை இப்போது சொல்லமுடியாது.*

SRI S. K. SAMBANDHAN : *தென்னாற்காடு மாவட்டம் நெசவுத் தொழிலில் பெயர்போனதாக இருக்கிறது. அங்கு ஒரு கூட்டுறவு மில் ஏற்படுத்துவதற்கு அமைச்சர் அவர்கள் ஏதாவது உறுதி கூறமுடியுமா ?*

THE HON. SRI R. VENKATARAMAN : This is only a request and not an interpellation. (Laughter.)

SRI A. K. THANGAVEL MUDALIAR : *காஞ்சீபுரம் கூட்டுறவு ஸ்பின்னிங் மில் தனிப்பட்டவர்களுக்காகவா ? கூட்டுறவு மூலமாகவா ?*

THE HON. SRI R. VENKATARAMAN : *கூட்டுறவு மூலம் தான்.*

*Industrial Training Centre*

* 228 *Q.*—DR. A. CHIDAMBARANATHAN : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether any Industrial Training Centre for women is functioning in the State; and